


செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே,
நெடியானே வேங்கடவா நின் கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
டியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே.

[பிறவிதோறும் பின்தொடரும் தீவினைகளைக் களைந்தொழிக்கும் திரு மாலே! நெடிதுநின்று அருள்பவனே, வேங்கடவனே! புகழ்பெற்ற நீ உறையும் கோயிலின் வாசலில், அடியார்களும், தேவர்களும் நாளும் உன்னைத் தொழ வணங்கிடும்படியாக நான் பிறந்து, உன் பவளம் போன்ற, புன்சிரிப்பு உதிரும், வாயழகைக் காணவிழைகின்றேன்.]

--(பெருமாள் திருமொழி)

# ஸப்தகிரி

## மார்ச் - 1995


தனிப்பிரதி ரூ. 2 — மலர் 25

வருடச்சந்தா ரூ. 24 — இதழ் 10



சிறப்பாசிரியர் :

திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.

அச்சிடுபவர்:

திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.


## உள்ளுறை



## அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : 'முத்துப்பந்தல்' வாகனத்தில் ஸ்ரீவேங்கடேஸ்வரர் - திருமலை.

முதல் உள்ளட்டை : திருமலையில் தெப்போத்ஸவம்

2-வது உள்ளட்டை : ஸ்ரீகோதண்டராமசுவாமி திருக்கோயில் உட்தோற்றம். திருப்பதி.

பின்னட்டை : ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி திருக்கோயில் உட்தோற்றம். திருப்பதி.

JAGADISH

# உங்களுடன்....

வேத உபநிடதங்கள், புராணங்கள் முதற்கொண்டு, சங்க இலக்கியங்கள், பின்னர்வந்த ஆழ்வார்கள் உள்ளிட்ட பல மெய்யடியார்கள் வரையில்; பல்லோர் தம் ஆயிரக்கணக்கான செய்யுட்களில் - பாடல்களில் ஒருமனதாக போற்றித்துதித்த பகவானாக, அவ்வேழு மலைகளில் நின்ற கோலத்தில் நாளும் அருள்பாலித்திடும் ஸ்ரீநிவாசன் திகழ்கின்றான். அவ்வேழுமலையானைக் கண்டோர், தாங்கள் பெற்ற அருள் அனுபவத்திற்கு ஏற்றவாறு பல பாடல்களின் மூலம் அவ்இறைவனைப் புகழ்ந்தேத்தி, பக்தி நெறியில் ஒரு எளிமையினை, ஆன்மீக ஆற்றலினை, உயர்வினை ஏற்படுத்தி 'வைணவ நெறி'க்கு மேலும் உரம் சேர்த்தனர். அவர்களுள் தங்களுக்கே உரிய ஒரு தனி 'பக்தி முத்திரை'யினைப் பதித்தவர்கள் ஆழ்வார்கள். அவர்கள் அளித்தருளியது, "திவ்யம் ததாமி தே சக்ஷு:" என்றும், "ஜன்ம கர்ம ச மே திவ்யம்" என்றும் கீதை போற்றும் 'திவ்யம்' எனும் சொல்லை அடைமொழியாகக் கொண்ட 'நாலாயிரத்திவ்யபிரபந்தம்' எனும் திராவிட வேதமாகும்.

வைணவ நெறிப்படி அத்திவ்யப் பிரபந்தம் 'பிரமாணம்' என்றும், அவற்றை வழங்கிட்ட ஆழ்வார்கள் 'பிரமாதா' என்றும், அப்பாசுரங்களில் இடம்பெற்றுள்ளன திவ்ய தேசங்கள் எனும் திருப்பதிகள் 'பிரமேயம்' என்றும் அழைக்கப்படுகின்றன. இறைவனை மற்றைய நிலைகளில்விட 'பின்னானார் வணங்கும் ஜோதி'யான அர்ச்சா திருமேனி அழகிலும், அத்திருமேனிகள் நின்றவாறும், கிடந்தவாறும், இருந்தவாறும் உகந்தருளின திருப்பதிகளின் மேன்மையிலும் ஆழங்கால்பட்டனர் ஆழ்வார்கள். இவ்வாழ்வார்கள் அம்மாயவனின் அம்சாவதாரங்களாக, மனிதனை இறைநிலைக்கு உயர்த்திட, அம்மாயவனாலேயே அனுப்பப்பட்ட இறைத்தூதர்களாகக் கருதப்படுகின்றனர். அவர்தம் திருப்பிறப்பை, ஸ்ரீமத்பாகவதமும், அவர்கள் பிறந்திட்ட இடத்தைச் சார்ந்த நதிகளைக் குறிப்பிட்டுக்கூறிய செய்திமூலம் அறிந்து இன்புறலாம். அப்பெருமைபெற்ற ஆழ்வார்களில் விந்தைபுரிந்தோர் பலரும் இருந்தனர். அவர்களுள் தனித்தன்மை பெற்று விளங்குபவர் நம் 'கூடல்நாயகன்' குலசேகராழ்வார்.

கோவிந்தனின் அழகிலும் அவனுறையும் திருத்தலங்களின் சிறப்பிலும் உருகிய மற்றைய ஆழ்வார்களிடமிருந்து, மால் உறையும் திருப்பதிகளில் ஒன்றான திருமலையுடன் குலசேகர் பிணைத்துக்கொண்ட பாசமும் பற்றும் அன்னாரைச் சற்றே வித்யாசப்படுத்தியுள்ளது. நம் குலசேகரர் "கான்புகன்ற காகுத்தன்" கதையில் கரைந்ததென்னவோ உண்மை! அரங்கத்து அண்ணலின் அழகில் ஆழங்கால்பட்டதும் உண்மை! ஆயினும் வேங்கடவன் உறையும் வினைதீர்க்கும் மாமலையாம் வேதமலைமீது அவர் கொண்ட ஈடுபாடு சற்றே விந்தையானது; புனிதமானது. ஒருவனுக்கு வாழ்க்கையில் புகழ் தந்தது வேறு ஒரு இடமாக அமையலாம். வசதி சேர்த்தது மற்றுமொரு இடமாக இருக்கலாம். ஆனால், தான் பிறந்த இடம் அவனுக்குப் பிறப்பைத் தவிர வேறு எதற்கும் இடமோ, வாய்ப்போ தரவில்லையாயினும், அந்த இடமே அவன் மனதில் என்றும், எங்கும் நினைவில் நின்றிடும். பெற்றதாயும், பிறந்த இடமும் ஒருவனுடைய வாழ்க்கையில் எப்போதும் இடம் பெறவே செய்யும். குலசேகரர் அனுபவித்த திருத்தலங்கள் ஏழேயாயினும், 'மலர்மகள் நாயகன்' உறைந்தருளும் திருமலையின் மீது அவர் ஏற்படுத்திக்கொண்ட தொடர்பு, தான் பிறந்த திருவஞ்சிக்களத்தையும் மறக்கச்

செய்துவிட்டது. வேங்கடமலையைப் பற்றி அவர் பாடிய பாசுரங்கள் பத்தேயாயினும், அப்பத்திலும் மலர்மங்கைமணாளனை முடி முதல் பாதம் வரை அணு அணுவாகக் கண்டும் கேட்டும் அனுபவிக்கத் துடிக்கும் அவர்தம் பக்தி உள்ளம் நமக்குத் தெரியவே செய்கின்றது. திருமலையை எவ்வகையிலாவது தன் பிறப்பால் உறவாக்கிக் கொள்ள வேண்டும் என்றும், வேங்கடவனை நாடிவரும் பக்தர்களின் உறவும் தனக்குக் கிடைத்திடவேண்டும் என்றும் அவர் படும்பாடு, அவரை மற்றைய ஆழ்வார்களிடமிருந்து சற்றே வேறுபடுத்தியுள்ளது.

திருமலையில் தான் பிறந்திடவேண்டும் என்று கூறுகின்றபோது, மீனாகப் பிறந்தால் சுனை வற்றிவிடுமோ என்றும், பறவையாகப் பிறந்தால் வேடர்கள் கையில் பிடிபடுவோமோ என்றும், மலைச்சிகரமாகப் பிறந்தால் நாளை கோயில் பார்வையிலிருந்து மறைக்கப்பட்டு விடுவோமா என்றும், வழிப்பாதையாகப் பிறந்தால் நாளை பாதை மூடப்பட்டுவிடுமோ என்றும், கோயில் வாசலில் ஒரு படியாகப் பிறந்தால் நாளை படி பொன்னால் மறைக்கப்பட்டுவிடுமோ என்றும் பலவாறு தனக்குத்தானே சந்தேகங்களை ஏற்படுத்திக்கொண்டு, எப்படிப்பார்த்தாலும், பிறக்கவிரும்பினாலும் இறுதியில் தன் பிறப்பின் சுமையை அந்தப் பரந்தாமனுக்கே அவர் விட்டுவிடுவதன் மூலம் ஏழுமலையின் ஏற்றமும், ஏழுமலையானின் அருளாற்றலும், திருமலை யாத்திரையின் சிறப்பும் சுட்டிக்காட்டப்படுகிறது. சித்திரக்கூடத்து நாயகனையும் இராமனாக எண்ணிப்பாடும் வகையில் இராமரின் தீவிர பக்தராக விளங்கிடும் நம் 'கொல்லி காவலர்', அவ் இராமர் பிறந்திட்ட திருஅயோத்தியினைப்பாடிய போதும், தான் அங்குப் பிறக்க எண்ணாது, 'பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே' என்றவருடைய முறையீட்டைப் பார்த்திடும்போது, அவருக்குள்ள 'வேங்கடப்பற்று' தெள்ளெனத் தெரியவரும்.

மெய்யடியார்கள் யாவரும் இறையருள் பெற்று முக்திபெறும் பேற்றினை அடைய வேண்டும் என்று துடித்திட, இவர்மட்டும் திருமலையில் மறுபடியும் பிறந்திட அவாவுறுகின்றார். இதற்கு, நாளும் திருமலையில் மணக்கோலமும் விழாக்கோலமும் பெற்றிடும் ஸ்ரீநிவாசனின் திவ்ய தரிசனமே முக்ய காரணமாக இருக்கக்கூடும். மேலும் கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக, ஏழையர் பங்காளனாக, வினைதீர்க்கும் வித்தகனாக நாளும் நின்றருளும் அவ்வேங்கடவன் உறையும் திருமலையானது உள்ளத்தைத் தூய்மைப்படுத்திடும், அறிவைச் செம்மைப்படுத்திடும், உடலைப் புனிதப்படுத்திடும் ஒரு வேத வெற்பாக இருப்பதால்தான், திருமலையானது நம் குலசேகரரை வெகுவாக ஈர்த்துள்ளது எனலாம்.

அத்தகு புனிதமிகு திருமலையானது, குலசேகராழுவார் அஞ்சியபடி இல்லாமல், மீன்கள் துள்ளிவிளையாடிடும் பல சுனைகளையும், வானோங்கு மரங்களையும், சலசலத்தோடும் நீரோடைகளையும், மாலவன் புகழ்பேசி சிறகடித்துப் பறந்திடும் பல இனப்பறவைகளையும், எல்லாவற்றிற்கும் மேலாக குலசேகரர் பிறக்கவிரும்பிய 'குலசேகரப்படி'யும் உள்ளன. ஆம் 'சேரலர் கோன்' கண்டு அனுபவித்த இயற்கையும், ஆன்மீகச் சூழ்நிலையும், வேங்கடநாதனும் நம் வாழ்க்கைக்கு ஒரு வழிகாட்டியாக இன்றும் திகழ்கின்றனர். அவற்றைத் திருமலை நாடிவரும் யாத்திரிகப் பொதுமக்கள் 'குலசேகரர்' வழிநின்று நாளும் அனுபவிக்கவே செய்கின்றனர். அவ்அனுபவத்தைத்தந்திட்ட குலசேகராழ்வாரின் திருவடிகளைப் பணிந்தேத்தி, திருமலையைத் தொழுதிடுவோமாக!



# முமுட்சுப்படி

திரு. மா. ருதிதாஸன் காஞ்சிபுரம்

## மூலம் : 203

" 'சசால சாபஞ்ச முமோச வீர:'-என்கிறபடியே இவை அநுபாயங்களான மாத்ரமன்றிக்கே கால்கட்டு என்கிறது."

1) மற்ற உபாய்ங்களை விட்டபிறகே பகவானைப் பற்ற வேண்டும் என்பது ஏன்?

பெருமானுடைய அம்புகளால் துளைக்கப்பட்டு நிலை கலங்கி நின்ற இராவணன் தன்னுடைய கையில் வில்லினை ஏந்தி நின்ற வரை இராமபிரான் அவனைப் போகவிடவில்லை.

இராவணன் தன்னுடைய வில்லைக் கீழே போட்டபிறகே அவனை நோக்கி இராமபிரான், "நீ இன்று போய் போருக்கு நாளைவா!" என்று விடை கொடுத்தார் என்பது இராமாயண நிகழ்ச்சி.

இதனை நோக்கும் போது இராவணன் தன் கையில் பிடித்திருந்த வில்லே அவன் வெற்றிக்குத் தடையாய் இருந்ததோடு, அவ்விடத்தை விட்டு அவன் செல்வதற்கும் தடையாக இருந்தது அறிகிறோம்.

அதுபோலவே, வேறு உபாயங்களின் சிறு தொடர்பும் வீடு பேறு அடைவதற்குக் காரணங்களாக அமையாமல் போவதுடன், சமுசார பந்தத்திலிருந்து விலகி உயர்ந்த வீடு பெறுவதற்கும் சேதனனுக்குத் தடையாக உள்ளது என்பதனை அறிகிறோம்.

ஆகவே, மற்ற உபாயங்களின் தொடர்பிலிருந்து நீங்கிய பின்பே பகவானைப் பற்ற வேண்டும் என்பது தெளிவாகிறது.

## மூலம் : 204

"சக்கரவர்த்தியைப் போலே இழக்கைக் குறுப்பு."

1) மற்ற உபாயங்களின் தொடர்பு பெருமானை இழப்பதற்குக் காரணமாகிறது என்பதனைச் சான்று காட்டி விளக்குக.

தசரதன் தன் மனைவியாகிய கைகேயிக்கு முன்பொரு கால் கொடுத்த வரத்தை மறுக்கக்கூடாது என்று எண்ணினான். வாய்மை தவறக் கூடாது என்பது உலகியல் சம்பந்தப்பட்ட சாமானிய தருமம். இந்தத் தருமத்தைக் கடைப்பிடித்ததால், தசரதன் கைகேயிக்கு வரம் கொடுத்துப் பெருமானையே இழந்து விட்டான். சாமானிய தருமத்தைக் காப்பாற்ற வேண்டிப் பெருமானாகிற உயர்ந்த தருமத்தையே - பெரும் பேற்றையே தசரதன் இழந்துவிட்டானன்றோ!

அதுபோலவே மேற்போக்காகப் பார்க்கும்போது தருமங்கள் போன்று காணப்படும் கன்ம ஞான பக்திகளைக் கடைப்பிடித்தால், இவை பெருமானாகிற பெரும்பேற்றைப் பெறுவதற்கு இடையூறாக இருப்பதுடன், பகவத் விஷயத்தோடு சேர்ந்து வாழ்வதாகிய இன்பப் பேற்றையும் இழக்குமாறு செய்து விடும் என்பதனையும் அறியலாம்.

## மூலம் : 205

" 'ஸர்வ தர்மங்களையும் விட்டு' என்று சொல்லுகையாலே சிலர் 'அதர்மங்கள் புகுரும்' என்றார்கள்."

1) எல்லாத் தருமங்களையும் விட்டு விடுதல் வேண்டும் என்னும் கருத்து குறித்துச் சிலர் கொள்ளும் சந்தேகம் யாது?

சர்வ தருமங்களையும் விடுதல் வேண்டும் என்று சொல்லுவதால், தீய செயல்களைச் செய்யாமல் இருத்தலையும் விட வேண்டும் என்பது பொருளாகாதா? என்று சிலர் சந்தேகம் கொள்வர்.

## மூலம் : 206

" அது கூடாது; 'அதர்மங்களைச் செய்' என்று சொல்லாமையாலே."

1) அந்தச் சந்தேகம் கூடாது என்பது ஏன்?

'எல்லாத் தருமங்களையும் விடு' என்றுதான் சொல்லப்பட்டுள்ளது. 'தீய கருமங்களைச் செய்!' என்று சொல்லவில்லை. எனவே, அந்தச் சந்தேகமே எழத்தேவையே இல்லை.

## மூலம் : 207

"தன்னடையே சொல்லிற்றாகாதோ என்னில்."

## மூலம் : 208

"ஆகாது தர்ம சப்தம் அதர்ம நிவ்ருத்தியைக் காட்டாமையாலே."

1) 'தர்மங்களை விட்டு' என்னுமிடத்தில் 'தீயவற்றை செய்யாதிருத்தலை விடுதல்' என்று ஏன் சொல்லப்பட்டதாகாது?

'தரும' என்னும் சப்தம் 'தீய கருமங்களைச் செய்யாதிருத்தல்' என்னும் பொருளைத்தெரிவிக் கிறது.

'தரும' என்பது நற்கருமங்க ளையே குறிக்கும். எனவே, 'தீய வற்றைச் செய்யாதிருத்தலை விடுதல்' என்பது பொருளா காது என்பதனை நன்கு உண ரலாம்.

மூலம் : 209

"காட்டினாலும், அத்தை ஒழிந்தவற்றைச் சொல்லிற்றுமித் தனை."

1) 'பாவங்களைச் செய்' என்னும் கருத்து இங்குப் பொருந்துமா?

பொருந்தாது.

இம்மைக்கும் மறுமைக்கும் நன்மையே தருவனவற்றைச் செய்யும் போது தீய செயல் களைச் செய்யாது விடுதல் தானாகவே ஏற்படும்.

'நன்மை தருவனவற்றையும் விட்டுக் கன்மஞான பக்திகளைச் செய்' என்று பெருமான் முத லில் உபதேசிக்கிறார். பின் னர் இவற்றையும் விட்டுத் தன் னையே பற்றுமாறும் இங்குக் கூறுகிறார்.

அப்படியிருக்கப் 'பாவங்க ளைச் செய்' என்பது பகவா னுடைய கருத்தாக இருக்குமோ என்று எண்ணுவது எங்ஙனம் பொருந்தும்?

மூலம் : 210

"தன்னையும் ஈச்வரனையும், பலத்தையும் பார்த்தால் அவை புகுர வழியில்லை."

1) இங்ஙனம் அதர்மத்தை ஒதுக்கிப் பேசுதற்குக் காரணம் யாது?

சேதனனையும், பெருமானை யும், சேதனன் விரும்பும் பய னையும் ஊன்றி நோக்கின், அத ருமங்கள் புகுதற்கு வழியில்லை என்பதை அறியலாம்.

சேதனன் அதருமத்தைச் செய் தால் பெருமானுக்கு வெறுப்பே உண்டாகும். எனவே, பெரு மானுக்கு விருப்பமானவற்றைச் செய்வதே சேதனனுக்குச் சொரு பமாகும்.

சேதனன் செயல் புரிவதற்குப் பயன் பெருமானின் முகமலர்த் தியே! இந்தப் பயனை நோக் கினாலும், தீச்செயல்கள் செய் யக்காரணமில்லை.

எனவே, தருமம் என்னும் சொல் 'நல்ல தருமங்களைச் செய்தல்' என்பதை மட்டுமே குறிக்கும் என்பதனை அறிய லாம்.

2) 199 முதல் 210 வரையுள்ள மூலங்-களின் கருத்துக்களைச் சுருக்கி வரைக.

புத்தி விசேஷத்தோடும் கூடி யவனாய் விடுகையே தியா கம் எனப்படும். கொடிய



பாவங்களைச் செய்யாது விடு தல் போன்று கன்மஞான பக்தி களாகிற தருமங்களையும் செய் யாது விடுதல் வேண்டும்.

குளித்த பிறகே உணவு உட் கொள்ள வேண்டும் என்பதைப் போல, மற்றைய உபாயங் களை விட்ட பிறகே இவ்வுபா யத்தைப் பற்ற வேண்டும். மற் றைய உபாயங்களில் சேதன னுக்குச் சிறிதும் பற்று இருத்தல் கூடாது. மற்றைய உபாயங் களில் சிறிது தொடர்பு ஏற்படி னும், தசரத சக்கரவர்த்தியைப் போன்று பேற்றை இழப் பதற்குக் காரணமாகி விடும். எல்லாத் தருமங்களையும் செய் யாது விடு என்பதனால், அதர் மங்கள் வந்து சேராவோ என் னில் 'அதர்மங்களைச் செய்' என்று கூறுமையின் அவை வந்து சேரா. இது தன்ன டைவே சொல்லிற்றாகாதோ என் னில், தருமம் என்னும் சொல் அதர்மங்களின் விடுதலையைக் காட்டாமையின் அது பொருந் தாது. 'ஸர்வ' என்னும் சொல் 'தருமம்' என்னும் சொல் லுடன் சேர்ந்திருத்தல், இது அதர்மங்களின் விடுதலையைக் காட்டினாலும், இந்த இடத் தில் அது வேண்டுவதில்லை யாதலால் அஃதொழிந்தவற் றையே இங்குச் சொல்லுகி றது. அன்றியும் சேதனன் தன் நிலையையும், பகவானின் இயல்பையும், தான் விரும்பி நிற்கும் பயனின் பண்பையும் நோக்கின் அதருமங்கள் நுழை வதற்கு வழியில்லை" என்பவன வாகிய கருத்துக்கள் 199 முதல் 210 வரையிலான மூலங்களில் கூறப்பட்டுள்ளன.

(தொடரும்)



# புண்ணியம் பூத்தது

திரு. வ. ஜோதி - புதுப்பேட்டை.

பிரபக்தி என்பது எம்பெருமானே சரணம் என்று, விடாது நினைந்து, அவன் அருளுக்குப் பாத்திரமாகி, மீளா சக்தி என்னும் முக்தியை அடையும் நெறியாகும்.

காட்டில் உறைதலும், மலைக் குகைகளில் வசித்தலும், மான் தோல் போன்றவற்றை உடுத்தலும், தலைமயிரை மழித்தலும், சடையாக நீட்டலும் இவை அனைத்தும் முக்தி பெறுவதற்குப் பலரும் மேற்கொள்ளும் வழிகளாகும். இந்நெறிகளைக் காட்டிலும் பிரபக்தி நெறியே மிகச் சிறந்தது.

இராமாயணம் முழுவதுமே பிரபக்தி அல்லது சரணுகதி சாஸ்திரம் என்றே அறிஞர் கூறுவர். பாலகாண்டத்தில் தேவரும், அயோத்தியா காண்டத்தில் பரதரும், ஆரணிய காண்டத்தில் முனிவர்களும் காகாசுரன் முதலானவர்களும், கிட்கிந்தா காண்டத்தில் சுக்ரீவன் முதலானவர்களும், சுந்தர காண்டத்தில் பிராட்டியும், யுத்த காண்டத்தில் வீடணனும் முறையே சரண் புகுந்தனர்.

எனவே இராமனைச் சரண் புகுந்தோர் அடைந்த பேரினும் பெரிய பேறு உலகில் இல்லை. இதனை அழகரந்தாதி மிக அற்புதமாகக் கூறுகின்றது.

செய்தவ ராக வருந்தியும்
தீர்த்தத்துறை படிந்தும்
கைதவ ராகமும் கற்று மென்னாங்
கடற் பார் மருப்பிற்
பெய்த வராகனை மால்லங்
காரனைப் பேரிலங்கை
எய்தவ ராகவா வென் றேத்த
நீங்கும் இருவினையே.

-அழகரந்தாதி -10

எனவே எம்பெருமான் இராமனை எண்ணித் துதிப்போர் எல்லாவிதமான பாவங்களும் நீங்கப்பெற்று முக்தி நெறியே அடைவர். இராமனுடைய திருநாமம் அமுதினும் சிறப்புடையது. உலக நோய்க்கெல்லாம் அருமருந்தாய் அமைந்தது. அந்த இராம நாமத்தை உச்சரித்தே சபரி மோட்சத்தை அடைந்தாள். அவளுடைய வாழ்க்கை மானிட இனத்திற்கே ஒரு வழிகாட்டியாக அமைந்து விட்டது. நலிவடைந்தோர் அனைவருக்கும் பகவான் ஆறுதல் அளிக்கும் தன்மை உடையவன் என்பதை விளக்கும் வண்ணமும் அமைந்துள்ளது.

சபரியைப் பற்றி முதன் முதலில் இராம இலக்குவர்களுக்குக் கூறுபவன் கவந்தன்தான். "தாயைக் காட்டிலும் சிறந்த அன்புடையவள்; உயிர்கட்கு உதவுகின்ற தன்மை உடையவள்; அத்தகைய சபரி என்பவளைச் சந்தித்து, அவள் ஏவுகின்ற வழியில் செல்' ' என்று கூறுகின்றுன்.

தாயினும் உயிர்க்கு நல்கும்
சவரியைத் தலைப்பட்டு அன்னாள்
ஏயதோர் நெறியின் எய்தி
இரலையின் குன்றம் ஏறி"

(--கம்ப-ஆரண்ய-கவந் 56)

எனவே கவந்தனுடைய வாயால் தாயைவிட மிக்க அன்புடையவள் என்று போற்றப்பட்டவள் சபரி. அப்படிப்பட்டவளின் இல்லத்தைத் தேடிக் கொண்டு இராம இலக்குமணர்கள் செல்கின்றனர். மதங்க முனிவரின் ஆசிரமம் இருக்கும் காட்டைச் சென்றடைகின்றனர்.

சபரி தங்கியுள்ள இடத்தை அடைகின்றனர். சபரி அப்போது இராம நாமத்தைத் துதித்த வண்ணம் இருக்கின்ருள். இராமனைக் கண்டதும் பரபரப்புடன் மகிழ்வுடன் எழுகின்ருள். அவளின் நீண்டநாள் எண்ணம் ஈடேறுகின்றது. தக்க ஆசனம் ஒன்றையும் நல்குகின்ருள். தன்னை இராமனிடம் சரண் செய்து கொள்ளுகின்ருள்.

நீண்ட நாட்களாய்த் தன்னையே சிந்தித்துக் கொண்டு இருக்கும் சபரியை நோக்கி இராமன் முதலில் இனிமையான சொற்களைக் கூறுகின்ருன். பின்னர், "நீ துன்பம் இல்லாமல் இருக்கின்ருயா?" என்று வினவுகின்ருன்.

இதனைக் கேட்டவுடன் சபரி இராமனை அன்புடன் நோக்கினாள்; துதி செய்தாள். இன்பத்தால் அருவி போன்றுக் கண்ணீரைச் சொரிகின்ற கண்களை உடையவளானாள். "என் மாயமான உலகப்பற்று நீங்கியது. எல்லையற்ற காலமாக நான் மேற்கொண்டிருந்த பெருந்தவத்தின் பலன் கிடைத்துவிட்டது; என் பிறப்பு ஒழிந்தது" என்று சொன்னாள். அவர்கள் உண்ணுதற்கு வேண்டியவற்றைக் கொண்டு வந்து கொடுத்தாள். இராமன் அதை விரும்பி உண்டு இருந்தனன்.




ஆண்டு அவன் அன்பின் ஏத்தி
அழுதுஇழி அருவிக் கண்ணன்;
மாண்டது என்மாயப் பாசம்!
வந்தது வரம்பில் காலம்
பூண்டமா தவத்தின் செல்வம்!
போயது பிறவி என்பாள்
வேண்டிய கொணர்ந்து நல்க
விருந்து செய்து இருந்த வேலை.
--கம்ப-ஆரண்-சபரி-3

சபரி வேண்டியதைக் கொண்டு வந்து கொடுத்தாள் என்று கம்ப இராமாயணப் பாடல் தெரிவிக்கின்றது. இருப்பினும் இலந்தைப் பழங்களைக் கொண்டு வந்து இராமனுக்குக் கொடுத்தாள் என்றே சில நூல்கள் தெரிவிக்கின்றன. அத்துடன் மட்டுமின்றி, ஒவ்வொரு பழத்தையும் அவள் தன் வாயால் கடித்து ருசி பார்த்துப் பின்னரே இராமனுக்குக் கொடுத்தாள்; அன்பின் மிகுதியால் அப்பழம் எச்சில் ஆகிவிட்டது என்ற உணர்வின்றியே கொடுத்தாள்; இராமன் அப்பழங்களை விரும்பி உண்டான்; இன்பம் யாவும் அவள் அன்பில் அடங்கி உள்ளதாகக் கருதினான்; அவளைப் பாராட்டிப் பேசினான் என்றும் அந்நூல்கள் தெரிவிக்கின்றன.

கம்பராமாயணத்தின் மிகைப் பாடல் ஒன்று சபரி இராமனுக்கு வழங்கிய பழங்களை ஒரு பட்டியல் போட்டுக் காட்டுகின்றது. மாங்கனி, வாழைப்பழம் போன்ற பலவகையான கனிகளை வழங்கினாள் என்று அப்பாடல் தெரிவிக்கின்றது.

மாங்கனி தாழை ஈன்ற
வாழையின் கனிகளோடும்
ஆங்கனி யாவது ஈதென்று
அருந்தி நான் விரும்பி
வைத்தேன்
பாங்கின்இது அமுது செய்யும்
என்றனள் பரிவின் நல்கும்
தேங்கனி இனிதின் உண்டு
திருவுளம் மகிழ்ந்தான் வீரன்.
(--கம்ப-ஆரணி-சபரி)

இத்தகைய சபரி முற்பிறவியில் செய்த புண்ணியத்தின் பயனாகவே இப்பிறப்பில் இத்தகைய நிலையை அடைந்தாள். சபரி முற்பிறவியில் ஒரு நாட்டின் அரசியாக இருந்தாள். தன் செல்வச்செழிப்பைக் கொண்டுப் பலருக்குத் தொண்டு செய்து வந்தாள். ஆனால் உடல் உழைப்பின் மூலம் எந்த வித உதவியும் செய்யவில்லை. அவள் மகான் ஒருவரைச் சந்தித்து தான் மறுபிறவியில் தொண்டு செய்யும் பாக்கியத்தைப் பெற வேண்டும் என்று அருள் பெற்றாள். திருவேணியில் தன்னுடைய உயிரை விட்டாள்.

சபரி மறுபிறவியில் ஒரு மலை ஜாதி இனத்தில் பிறந்தாள். அம்மலை சாதியினருக்கு சபரர் என்று பெயர் எனவே, அவள் சபரி என்றழைக்கப்பட்டாள். கன்னிப்பருவத்தில் அவளுக்குத் திருமண ஏற்பாடுகள் தொடங்கின. திருமண விருந்தில் பலியிடும் பொருட்டு இரண்டு ஆடுகளைக் கொண்டு வந்து வீட்டில் கட்டி வைத்திருந்தனர்.

சபரி அதைக் கண்டு திடுக்கிட்டாள். உயிரைக் கொன்று விருந்திட அவள் மனம் ஒப்பவில்லை. எனவே அவள் நள்ளிரவில் வீட்டை விட்டு வெளியேறினாள். பின் பாம்பா என்ற ஏரிக்கரையின் அருகில் உள்ள மதங்கர் என்ற முனிவரின் ஆசிரமத்தை அடைந்தாள்.

இம்மதங்க முனிவரே வாலிக்குச் சாபமிட்டவர். இவருடைய ஆசிரமத்திற்குப் பக்கத்தில் சென்று வசிக்கத்தொடங்கினாள். ஒருவரும் அறியாமல் பகலில் மரக்கிளையில் ஏறி அமர்ந்து மறைந்து கொள்வாள். இரவு நேரங்களில் பிறர் அறியாமல் மகான்களுக்குத் தொண்டு செய்யத்தொடங்

கினாள். முனிவர்கள் செல்லும் வழியைத் தூய்மை படுத்து வாள். ஒருநாள் மதங்க மகரிஷி இவளைக் கண்டார். அவள் நிலையை விசாரித்து அறிந் தார். பின்னர் அவள் மேல் இரக்கம் கொண்டு அவளைத் தன் ஆசிரமத்தில் வைத்துக் கொண்டார். "இராம நாம" மந்திரத்தை அவளுக்கு உபதே சித்தார்.

பின்னர் அவர் பிரம்மலோ கம் செல்லும்பொழுது, "நான் கூறிய இராம நாமத்தை தின மும் ஜபித்துவா. இராமன் கட்டாயம் உன் வீட்டிற்கு வரு வான்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

மதங்கர் கூறியபடி தின மும் இராமனின் வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தாள். அவனுக்காகப் பழங்களைக் கொண்டு வந்து வைப்பாள். மாலை வரை எதிர் பார்ப்பாள். இராமன் வராததால் மாலையில் அப்பழங்களைப் புசித்து விடு வாள் இவ்வாறு ஆண்டு கள் பல கடந்தன. இராமன் வரவில்லை. அவள் முதுமை அடைந்தாள். இருப்பினும் மனம் தளராமல் அவனுக்கா கப் பழத்துடன் காத்திருந்தாள். பின்னர் ஒருநாள் வந்தான். அவள் தந்த பழங்களை உண் டான். சபரியும் மகிழ்ந்தாள்.

அப்பொழுது சபரி இராம னைப் பார்த்து "எம் தந்தையே" என்று விளிக்கின்றாள். எல்லா வற்றிற்கும் மேலான பரம்பொ ருளான இராமனை அவள் தந் தையே என்றழை. அவனோ, "தாயே....!" என்று சபரியை அழைக்கின்றான்.

**இருந்தனென் எந்தை நீஈண்டு**
**எய்துதி என்னும் தன்மை**
**பொருந்திட இன்று நான்என்**
**புண்ணியம் பூத்தது என்ற**
**அருந்தவத்து அரசி தன்னை**
**அன்புற நோக்கி எங்கள்**
**வருந்துறு துயரம் தீர்த்தாய்**
**அம்மனை! வாழி! என்றான்.**

(--கம்ப-ஆரண்ய-சபரி-5)

"என் தந்தையே! நீ இங்கு வருவாய் என்பதை அறிந்து உன் வரவிற்காகக் காத்திருந் தேன்; இன்றுதான் என் தவத் தின் புண்ணியப்பலன் மலர்ந் தது; பயன் அளிக்கின்றது" என்றெல்லாம் கூறிய தவச் செல் வியாகிய சபரியை அன்புடன் "தாயே! எங்களுடைய வருத்தம் மிக்க வழி நடைத்துன்பத்தை உன்னுடைய அன்பான விருந் தால் நீக்கினாய்; வாழ்வாயாக" என்று இராமன் கூறினான்.

தனக்குரிய புண்ணியம் பூத் தத் தன்மையால்தான் இராமன் வந்தான் என்று சபரி கூறுவ தும், சாதாரண வேடுவப்பெண் ணைத் 'தாயே' என்று இராமன் அழைப்பதும் இங்கு எண்ணிப் பார்க்கத் தக்கது. மனக்கட்டுப் பாட்டுடன் இருந்து தெய்வீக வாழ்வு வாழ்ந்த சபரியின் புண்ணியம் பூத்தது. அவள் இராம இலக்குவர்க்கு ருசிய முக மலையின் வழியைக் கூறினாள்.

பெருமானை மனதாலே எண்ணி இருப்பவர்களே முக்தி அடையவர் என்பது திண்ணம். அப்படி இருக்க இராமனை நேரில்கண்ட சபரி நிலையைச் சொல்லவும் வேண்டுமோ...?

தான் முன்னர் வருந்திப் பெற்ற தவத்தின் பயனால் தன் உடம்பை விட்டு மேலுலகைத் தனியாக இன்பமுடன் அடைந் தாள். அதைக்கண்ட இராம இலக்குவர் அளவற்ற வியப்ப டைந்தனர். பிறகு சபரி காட் டிய வழியில் சென்றனர்.

**பின்னவன் உழந்து பெற்ற**
**யோகத்தின் பெற்றியாலே,**
**தன்னுடல் துறந்து வானம்**
**தனிமையில் இனிது சார்ந்தாள்**
**அன்னது கண்ட வீரர்**
**அதிசயம் அளவின்றி எய்திப்**
**பொன்னடிக் கழல்கள் ஆர்ப்பப்**
**புகன்றமா நெறியில் போனார்.**

(--கம்ப-ஆரண்-சபரி-8)

எனவே பரமபதம் என்னும் வீடுபேறு பெறுவதற்குப் பலவ ழிகள் உண்டு. அவ்வழிகளுள் பக்தி, பிரபக்தி என்னும் வழிகள் மிகச் சிறந்தவை. இவ்விரண்டு வழிகளிலும் சென்று சபரி மோட்ச மார்க்கத்தைச் சாதித் தாள். இராமனை எண்ணி அவன்மேல் பக்தி கொண்டு அவன் நாமத்தை ஜபித்து வந்தாள். அவனைக் கண் டவுடன் தன்னைச் சரணகதி செய்து கொண்டாள். உடனே மோட்ச மார்க்கத்தைச் சாதித் தாள்.

எனவே எக்காரியங்கள் செய் தாலும் அதனை விளம்பரப் படுத்திக் கொண்டால் அதன் புண்ணியம் நசிந்து போகும். ஆடம்பரத்தின் பொருட்டோ, பிறர் போற்ற வேண்டும் என் பதற்காகவோ தொண்டு புரிதல் கூடாது. பகவானைப் பூசிக்கும் காரியத்தைப் பலரும் அறியும் படிச் செய்ய வேண்டியதில்லை.

எனவே இழிந்த பிறவியில் தோன்றினாலும் தன் உயர்ந்த நடத்தையால் புண்ணியம் பூத் தப் புனித புதல்வியாய்ச் சபரி திகழ்ந்தாள். இராமனால் 'தாயே' எனறழைக்கும் பேறு பெற்றாள். அவள் வழி மனித வர்க்கம் உய்த்துணர வேண்டிய புனித வழியாகும்.



# இந்திர வழிபாடும் கிருஷ்ண வழிபாடும்

செல்வி சோ.கி. கல்யாணி - மதுரை.

### முன்னுரை :

வேதகாலக் கடவுளர்களோடு வேள்வி, பலி என்பனவும் ஆரியரது நாகரீகத்தில் வலிமை பெற்றிருந்தன. ஆரிய - திராவிடக் கலப்பின் போது திராவிடர்களின் கடவுளர்கள் ஏற்றம் பெற்றனர். அசோகருடைய புத்தமதப் பிரசாரத்தை முறியடிப்பதற்காக ஆரியர்கள் பலவற்றைத் தியாகம் செய்ய வேண்டியிருந்தது. இச்சூழ்நிலையில் ஆரியரல்லாதாரின் கடவுளான வாசுதேவ கிருஷ்ணன் ஆரியக் கடவுளான இந்திரனின் பல பண்புகளைத் தன்னகத்தே உட்கிரகித்தது, ஆரியர் - ஆரியரல்லாதார் ஆகியோரிடையே ஒரு சமரசப் போக்கை ஏற்படுத்தியது. வாசுதேவ கிருஷ்ணனும், இந்திரனும் சமம். பின் இந்திரனைவிட வலிமை வாய்ந்தவன் கிருஷ்ணன், பின் விஷ்ணுவின் மிக உயர்ந்த அவதாரமாகக் கிருஷ்ணன் உயர்த்தப்படுதல் என்ற படிநிலைகள் இலக்கியச் சான்றுகளைக் கொண்டு இக்கட்டுரையில் நிறுவப்படுகின்றன. இவ்வகையில் இந்திர வழிபாட்டைக் கிருஷ்ண வழிபாடு எவ்வாறு வெற்றி கண்டது என்பது விளக்கப்படுகிறது.

### சமுதாயச் சூழல் :

புத்த சமயம் செல்வாக்கு மிகுந்த சமயத்தில், ஆரியக் கலாசாரம் அழிவை நோக்கி நின்றது. புத்த சமயமும் பிற புறச் சமயங்களும் உயிர்க் கொலை புரியும் வேள்வி முறையைத் தீவிரமாக எதிர்த்துக் கடுமையான பிரச்சாரம் செய்ததால் புரோகிதர்களின் செல்வாக்கும் அதிகாரமும் தளர்ந்தன. வருணாசிரமச் சட்டங்கள் நலிந்துவிட்டன. தாழ்ந்த வருணத்தவர்களின் மாறுபட்ட பொருளாதார நிலைமையாலும், அன்னியப் படையெடுப்பாளர்கள் பெருவாரியாக நுழைந்து புத்தமதத்தை ஆதரித்ததாலும், பிராமணீயச் சமுதாய அமைப்பு ஆட்டம் கண்டது. இந்த நிலையில் பிராமணீயத்தைப் பாதுகாக்க வேண்டும் எனில், அச்சமுதாயத்தின் சமூகப் பொருளாதாரக் கொள்கைகளுக்கு ஊறு நேராதபடி, ஆனால் அதேசமயம் புதிய நிலைக்குத் தக்கபடி தன்னை மாற்றித் தக்கவைத்துக் கொள்ள வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. வேத வழிபாட்டுமுறை காலத்துக்கு ஒவ்வாதது ஆகிவிட்டது. எனவே, பிராமணர்கள் பிராமணீய சமூக ஒழுக்கத்தைக் கலக்கவும், தங்களுடைய மேலாதிக்கத்தை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டியும் ஆரியரல்லாதாரின் செல்வாக்கு பெற்ற தெய்வமான வாசுதேவ கிருஷ்ணன் என்ற தெய்வத்தை ஏற்று, அது வேதம் காட்டும் வைதீகமான நாராயண விஷ்ணுவின் உருவமே எனக் கூறலாயினர். ஒன்றுமே செய்ய இயலாத நிலையில், ஆரியர்களால் தங்கள் தெய்வமும் ஆரியர் அல்லாதாரின் தெய்வமும் ஒன்றே என்ற கருத்து ஒப்புக் கொள்ளப்பட்டது.

வேதகாலக் கடவுளான விஷ்ணுவின் சிறுகூறே கிருஷ்ணன் என்ற கருத்து தோன்றி வலுப்படுதல்; பின்னர் வேதம் சுட்டும் விஷ்ணு சர்வ வல்லமை பொருந்திய கடவுளாக உயர்த்தப்படுதல்; விஷ்ணுவின் மிக உயர்ந்த அவதாரமாகக் கிருஷ்ணன் உயர்த்தப்படுதல் என்ற படிநிலைகள் இலக்கியங்களில் காணப்படுகின்றன.

புத்தமதத் தோற்றத்திற்குப் பின் இந்திர வழிபாடு சிறப்பிழக்கவே, இந்திரனைப் பற்றிய கதைகள், பண்புகள் யாவற்றையும் கிருஷ்ணன் பெறுதல், பின்னர் எழுந்த புராணங்களில் இந்திரன், கிருஷ்ணனின் வலிமையைக் கேட்டுப் பெற வேண்டிய தெய்வமாகத் தாழ்தல்; முனிவர்களின் சாபத்திற்கு ஆளாகித் தன் நிலையிலிருந்து தாழ்தல் என்பன இந்திரனின் மறைமுக வீழ்ச்சியைச் சுட்டுகின்றன. இந்நிலையில் "நாராயணனை அடைய விரும்புகிறோம். அதன் பொருட்டு வாசுதேவனாகிற அவனை உபாசிக்கிறோம். அந்த உபாசனையை விஷ்ணுவானவர் வளரச் செய்யட்டும்" என்ற கருத்து வலுப்படுகிறது.

### வேத காலத்தில் இந்திர வழிபாடு :

வேத காலத்தில் இந்திரன் வலிமை வாய்ந்த தலைமைத் தெய்வமாகக் கருதப்பட்டான். ரிக் வேதத்தின் பெரும்பகுதி இந்திரனைப் போற்றி வழிபடும் பாடல்களாக உள்

ளது. இந்திரனைப் பற்றி மக்டோனல் என்பர், "இடிகடவுள்; நெடிய தோற்றத்தை உடையவன்; நிறைய உண்பவனும் குடிப்பவனும் ஆவான். தன் வஜ்ஜிராயுதத்தால் அசுரர்களைக் கொல்பவன்" என்கிறார். ரிக்வேதம், "இந்திரனை மனிதனைப் போன்ற தோற்றம் உடையவனாக வர்ணிக்கிறது. அவனது வயிறு சோம பானத்தால் நிரம்பியதாக உள்ளது. இரண்டு கண்களையும் எடுப்பான மூக்கையும், நீண்ட வலிமையான கைகளையும் சூரியனின் பொலிவுட்னும் கூடிய அழகிய தோற்றம் உடையவனாக இந்திரன் உள்ளான். அவனது தங்கத்தேரை வலிமையான போர்க்குதிரைகள் இழுக்க அவன் பயணஞ் செய்கிறான்" என்றும், "நகரங்களை வெல்பவன், பிறக்கும் போதே எல்லையற்ற ஆற்றலை உடையவன், இடியை ஆயுதமாக உடையவன்" என்றும், நூறு வலிமைகளையுடையவன் இந்திரன் ஆதலால், 'மகபா' என்றும் போற்றுகிறது. இனி இந்திர வழிபாட்டைப் பற்றிக் காண்போம். இந்திரன் பெரிதும் வலிமை மற்றும் உடல் தோற்றத்திற்காகவே புகழப்பட்டுள்ளான். இந்தியாவிற்குள் குடியேறிய ஆரியர்கள் அங்குள்ள மக்களைக் (திராவிடர்) கொல்வதையோ, அவர்களது செல்வத்தைக் கொள்ளையடிப்பதையோ குற்றமாகக் கருதவில்லை. இந்நிலையில், கொள்ளையடிக்கப்பட்டதை அனைவர்க்கும் பகிர்ந்தளிக்கும்படியும் இந்திரன் வேண்டப்படுகிறான். ஆரியர்கள் தங்கள் மேய்ச்சல் நிலத்தை அபகரித்துக் கொண்டதால் ஆரியர் அல்லாதார் நேரம் கிடைக்கும் போதெல்லாம், கொள்ளை அடித்தல், கால்நடைகளைத் திருடுதல், வேள்விகளைக் கெடுத்தல் என்ற செயல்களைச் செய்து, ஆரியர்களை வலிமையுடன் தாக்கினர். இது போன்ற சமயங்களில் இந்திரன் வழிபடப்பட்டான். "இந்திரனே! யாரும் எங்கள் உடலைத் துன்புறுத்த வேண்டாம். கொலைகளைத் தூரமாகக் கொண்டு போய்விடு. மேன்மேலும் அதிகரிக்கும் புகழையும், வலிமையும் வீரமும் வாய்ந்த போர்க் குதிரைகளையும், வீரர்களையும் கொடு" என்றும், "ஓ! இந்திரனே! எங்கள் பசுக்களைப் பத்திரமாக வீடு சேர்ப்பிப்பாயாக. எதிரிகளின் பசுக்களும் எங்களிடம் வரட்டும். எங்கள் தேர் வீரர்கள் எப்போதும் வெற்றியையே பெறவேண்டும். எங்கள் படையின் அணிவகுப்பைக் காப்பாயாக!" எனறும் வேண்டுகின்றனர். தங்கள் பிரார்த்தனைகள் நிறைவேறும் பொருட்டு இந்திரனை, அவனுக்குப் பிரியமான சோமபானத்தை அருந்த வருமாறு அழைத்துப் படைத்தும், எருமை மற்றும் காளைகளின் நெருப்பில் வாட்டப்பட்ட பெரிய இறைச்சிக் குவியலைப் படைத்தும் வழிபட்டனர்.

இந்திரனது புகழ் அவன் பிற மனிதர்கள் அல்லது தெய்வங்கள் செய்யவியலாத அமானுஷ்ய செயல்களைச் செய்ததால் மட்டுமே நிலைத்தது என்பது பெறப்படுகிறது. மனிதர்களுக்கும் பிற தெய்வங்களுக்கும் பகையினால் ஏற்படும் துன்பத்தைப் போக்குதலே அவனது வேலை. 'மகபா' என்ற பட்டம் நூறு வேள்விகளைச் செய்தபின் கிடைக்கும் சக்தியைக் குறிக்கிறது எனலாம். எனவே, இந்திர பதவியை அடைய வேண்டிச் செய்யப்படும் நூறாவது வேள்வியை அவன் பெரிதும் சேதப்படுத்துகிறான். எனினும் ஆரியர்களின் சொற்திறமையில் மயங்கி, அவர்களது பலிப்பொருள்களை ஏற்று, அவர்களது விருப்பத்தை நிறைவேற்றும் வலிமை வாய்ந்த தேவனாக மட்டுமே இந்திரன் வேத காலத்தில் விளங்கியது தெரிகிறது. 'நாங்கள் உனக்கு விருப்பமான இதை உனக்குத் தருகிறோம். நீ எங்களுக்காக இதைச் செய் அல்லது தா' என்பதே அக்கால வழிபாட்டின் சாரம் என்பதும் பெறப்படுகிறது.

### கிருஷ்ண வழிபாட்டு முறை :

இந்திரனின் வழிபாட்டு முறையினின்று கிருஷ்ண வழிபாட்டு முறை பெரிதும் வேறுபட்டு விளங்குகிறது. தம்முடைய வேண்டுதல்களை நிறைவேற்றிக்கொள்ளும் பொருட்டு ஆயிரம் உயிர்களைக் கொல்ல வேண்டாம்; உள்ளன்புடன் ஒரு சிறு இலை, பூ, கனி எவற்றையேனும் அளித்தால் போதும். புகை, நீர் முதலியவற்றாலும் வழிபடலாம். கிருஷ்ணனை வழிபட வேண்டுபவர்களுக்கும் கிருஷ்ணனுக்கும் இடையே யாரும் தொடர்பாளராக இருக்க வேண்டாம். அதாவது இந்திர வழிபாட்டில் போன்று பூசாரிகள், வேதப்புரோகிதர்கள் கட்டாயம் தேவையில்லை. நான் இதை உனக்குத் தருகிறேன். இதை ஏற்று நீ எனக்கு இதைச் செய் என்பது வேண்டப்படாமல், எதையும் தராமலே உதவி செய்பவன் கிருஷ்ணன் என்று சுட்டப்பட்டது. வேத காலத்தில் ஒவ்வொரு செயலுக்கும் உரிமையுடையவர்களாய்ப் பல தெய்வங்

கள் இருக்க, கிருஷ்ணன் ஒருவனே சர்வ வல்லமை படைத்தவனாக, எல்லாவகைத் துன்பங்களிலிருந்து நீக்குபவனாகப் படைக்கப்படுகிறான். இந்திரன் மனித தோற்றம் மட்டும் பெற்றவனாக இருக்கக் கிருஷ்ணன் மனிதத் தோற்றத்துடன் மனிதப் பண்புகளையும் பெற்றதாக உள்ளான். வேத காலத்தில் நிலவிய பல கடவுளர் கோட்பாட்டுக்கு எதிராகத் தனிப்பட்ட கடவுள், அதன்மீது செலுத்தும் தீவிரமான அன்பு மற்றும் விருப்பம் என்பதே 'பக்தி' என்றும், அதுவே மனிதன் மிக உயர்ந்த நிலையை அடைய எளிமையான வழி என்பதும் கிருஷ்ணர் வழிபாட்டில் கூறப்பட்டது. கிருஷ்ண வழிபாட்டின் வளர்ச்சி நிலையில் உச்சமாகக் குப்தர்காலத்திற்குப்பின் கடவுளை மனிதப் பண்புகள் உடைவனாகக்கூறுவது, மனிதன் கடவுட் பண்பைப் பெறவும் புரிந்து கொள்ளவும் உதவியது. பகவத் கீதையில் இக்கருத்து தோற்றம் நன்கு வெளிப்படுகிறது.

## இந்திரனும் கிருஷ்ணனும் சமம் :

தன் காலத்திலேயே தன்னின மக்களால் வழிபடப்பெறும் தகுதியை அடைந்த கிருஷ்ணன், தன் வீரத்தாலும், மாயம் செய்கின்ற தன்மையாலும் இந்திரனுக்குச் சமம் என்கிற நிலையை அடைகின்றான். கம்சன், தன்னைக் கொல்வதற்காக வந்த கிருஷ்ணனைப் பார்த்தவுடன், அவன் சிவன் அல்லது இந்திரன் என்று நினைக்கிறான். தன் பட்டத்து யானையைக் கொன்றதால் அவன் ஒருவேளை விஷ்ணுவின் அம்சமோ என நினைக்கிறான். இது வலிமையின் காரணமாகக் கிருஷ்ணனை, இந்திரன், விஷ்ணு என்பவர்களோடு ஒப்பக் கருதுகின்ற நிலையைக் காட்டுகிறது.

காமனது மகனான அநிருத்தனைச் சிறைப்படுத்திய வாணசுரனைக் கொன்று, அநிருத்தனையும் உஷையையும் மீட்டுத் துவாரகை திரும்பியவுடன் கிருஷ்ணனைத் தேவர்களும், பிறரும் இந்திரனும் மிகவும் பாராட்டுகின்றனர். இந்நிகழ்ச்சியின் போது வாணசுரனைக் கொல்வதற்காகக் காமனும், இந்திராணியும் கிருஷ்ணனுக்கு உதவியதைச் சிலப்பதிகாரம் கூறுகிறது. தன் எதிரிகளுள் ஒருவனைக் கொன்றதைப் பாராட்டும் பொருட்டே, இந்திரன் கிருஷ்ணனைப் புகழ்ந்தும் உதவியும் புரிந்திருக்க வேண்டும் என்பது இதனால் தெளிவாகின்றது.

துவாரகை என்ற அழகிய நகரத்தைக் கிருஷ்ணன் நிர்மாணிக்கும் பொருட்டு தேவ தச்சனான விசுவகர்மாவிடம், இந்நகரம் இந்திரனின் அமராவதி போல் விளங்க வேண்டும் எனக் கூறுகிறான். இந்திரனும் 'அவ்வாறே செய்வாயாக!' என விசுவகர்மனைப் பணிக்கிறான். இது இந்திரனையொத்து விளங்கவேண்டும் என்ற கிருஷ்ணனின் ஆசையை வெளிப்படுத்துகிறது. ரிக்வேதத்திலும் பின் விஷ்ணு ஸூக்தத்திலும் இந்திரனின் தம்பி; நண்பன் என்ற உறவு முறைகளில் கிருஷ்ணன் சுட்டப்பெறுகிறான். மேலும் கிருஷ்ணன் மூவடிகளால் உலகம் அளந்தது, பாற்கடல் கடைந்தது என்ற செயல்களைத் தன் நண்பனான இந்திரனின் பொருட்டு செய்தான் எனக்கூறுகிறது. மேலும் விஷ்ணு துயிலும் காலம் முழுதும் அவரது வேலைகளை அவரது நண்பனான இந்திரன் செய்கிறான் எனப் புராணங்கள் கூறுகின்றன. இவற்றைக் கருத்தில் கொண்டே ஹரிவம்சம் இந்திரனே கிருஷ்ணன் என்கிறது.

துவாரகா நிர்மாணத்தின் போது கிருஷ்ணனுக்கு என்று தனியாகக் கோயில்கள் அமைக்கப்படுகின்றன. அப்போது கிருஷ்ணன் இந்திரனுக்கும் கோயில்கள் அமைக்குமாறு கூறுகிறான். தன்னின மக்களுக்குப் புதியதான வேதக்கடவுளான இந்திரனை எவ்வாறு வணங்கவேண்டும் என்று கிருஷ்ணன் கற்றுத்தந்தான் என்று ஹரிவம்சம் சுட்டுவதிலிருந்து இந்திரனும் கிருஷ்ணனும் சமம் என்ற கருத்து வலுப்பெற்றது புலனாகிறது. சிலப்பதிகாரக் காலத்தில் இந்திரன், கிருஷ்ணன், பலராமன் ஆகியோர்க்குத் தனித்தனியே கோவில்கள் இருந்தமையும் புலனாகிறது.

இனி இந்திரனின் பண்புகளைக் கிருஷ்ணன் உட்கிரகித்தது பற்றிக் காண்போம். ரிக்வேத காலத்தில் இந்திரன், சிவன், பிரம்மா என்ற மூன்று தெய்வங்களுக்கு மட்டுமே மது அருந்தவும் நடனம் நிகழ்த்தவும் உரிமை இருந்ததாக அறிகிறோம். இவற்றைத் தன்னகத்தேயும் கொண்டதாக நிறுவவே ஆழ்வார்கள் கிருஷ்ணனே வாணசுரனைக் கொல்லும் போதும், காளியனைக் கொல்லும் போதும் நர்த்தனம் புரிகின்றதாகக் காட்டுகின்றனர்.

இந்திரன் பல உருவங்களில் சுற்றித் திரிவதாக ரிக்வேதத்தில் குறிப்பிடப்படுவதைக் கோண்டா சுட்டுகிறார். அதாவது இந்திரன் தான் விரும்பிய

போது தன்னையொரு விலங்கின் உடலின் உருமாற்றி வெளிப்பட்டான். இந்திரனின் இத்தன்மை, தான் அடைய விரும்பியவற்றைத் தடையின்றிப் பெறவும், தன் எதிரிகளைத் தாக்கவும், தான் எதிரிகளால் தாக்கப்படும்போது மறைந்து கொள்ளவும் பெரிதும் உதவியிருக்கும் என்பதில் ஐயமில்லை. பரிபாடலும் கிருஷ்ணனை மாயோன் என்கிறது. இந்திரனின் இத்தன்மையை ஆழ்வார்கள் கிருஷ்ணனுக்கும் ஏற்றி அவன் வேண்டுருவம் கொள்ளும் தன்மைய்ன் என்கின்றனர். மேலும் கிருஷ்ணனை மாயோன், மாயா, மாமாயன், மாயப்பிரான் என்றெல்லாம் சுட்டுகின்றனர். புராணங்களில் இந்திரனின் விலங்காய் வெளிப்படும் தன்மை கிருஷ்ணனுடன் தொடர்புபடுத்தப்பட்ட மீன், ஆமை, பன்றி என்ற அவதாரங்களால் சமன் செய்யப்பட்டது.

ரிக் வேதம் இந்திரனுடன் தொடர்புபடுத்திக்கூறும் ஹரி, வைகுந்தா, விருஷ்ணு, ரிஷபா, வாசுதேவா, விருஷ்ணிபதி, கேசவா, விருஷசாரவாஸ் என்பன பிற்காலத்தில் தொடர்பு படுத்தப்பட்டது என்கிறுர் கோஸ்வாமி.

தன் பதவியைத் தக்கவைத்துக் கொள்ள வேண்டிய காரணத்தால், இந்திரன் தனது பதவிக்குப்போட்டியிடுபவர்களையும், தன்னைவிட வலிமை பெற்று விளங்குபவர்களையும் தன் ஆயுதமாகிய இடியாலோ, தன் தன்மையாகிய மழை பெய்வித்து அழிவைத் தருதல் மூலமோ, தேவலோகப் பெண்கள் மூலமோ அழித்தான். இது தன் இருப்பைத் தக்கவைத்துக் கொள்ளல், தான் அடைய விரும்புகின்றவற்றிற்குத் தடையாக இருப்பவற்றை அழித்தல் என்ற பேருண்மையைத் தருகிறது. இந்திரனின் இவ்வியல்வு மருதமிறுத்தது, புள்வாய் கீண்டது, சகடாசுரனைக் கொன்றது, பூதனையைக் கொன்றது போன்ற செயல்களாலும், பின்பு நப்பின்னையைப் பெற ஏழு எருதுகளை வென்றது, உருக்குமிணியை கடத்திவந்து மணந்தது போன்ற செயல்களால் கிருஷ்ணனுக்கும் உரியதாக ஆக்கப்பட்டது.

இதனால் தன் வலிமைத்தன்மையாலும், மாயத்தன்மையாலும் இந்திரனையொத்து மதிக்கப்பட்ட கிருஷ்ணன், பின்பு இந்திரனது பண்புகள் பலவற்றைக் கிரகித்தது தெரிவருகிறது. இந்நிலையில் கிருஷ்ணனுக்கும் இந்திரனுக்கும் வலிமையில் எவ்வித நேரிடையான முரண்பாடும் தோன்றவில்லை என்பது கவனிக்கத் தக்கது.

## இந்திரனை விடக் கிருஷ்ணன் உயர்ந்தவன் :

கிருஷ்ணன் தன் இளமைப்பருவம் முதலே கம்சன் ஏவிய பல அசுரர்களைக் கொல்கிருன். எனினும் முதன்முதலாகத் தேவர்களின் மீது கிருஷ்ணனின் வலிமை அவன் மருதமரங்களாக நின்ற தேவர்களான நளகூபரன், மணிக்கிரிவன் என்பவர்களின் சாபந் தீர்த்தலோடு தொடங்குகிறது. இப்பண்பு தேவர்களின் தலைவனான இந்திரனிடம் இல்லாதது. ஆனால், இத்தன்மை திருமாலின் பிற அவதாரங்களில் இந்திரனுடன் தொடர்பு படுத்திக் கூறப்படுகிறது. கஜேந்திர மோட்சம் என்ற நிகழ்ச்சி யானை உருவில் வந்த இந்திரன், தான் முதலையினால் கொல்லப்படுவோம் என்ற நிலை வந்தபோது, 'ஆதிமூலமே' என்றழைத்துத் திருமாலின் உதவிபெற்று மீள்தலைச் சுட்டுகிறது. கௌதம முனிவரின் மனைவியான அகலிகையைப் புணரவேண்டி, இந்திரன் முதலில் சேவலாகவும், பின் பூனையாகவும் மாறித் தப்பித்தாலும் அவன் சபிக்கப்படும் நிலையை அடைகிருன். அவனால் பாதிக்கப்பட்டு அகலிகை, திருமாலின் அவதாரமான இராமனால் சாபந்தீர்க்கப்பெறுகிருள்.

இந்திரனைக் கிருஷ்ணன் முதலில் வெற்றி கொண்ட நிழ்ச்சி கோவர்த்தன மலையைக் குடையாக ஏடுத்தது தான். ஹரிவம்சம், பாகவதபுராணம், விஷ்ணுபுராணம் முதலிய அனைத்தும் இந்நிகழ்ச்சியைச் சுட்டுகின்றன. ஆயர்கள் ஆண்டுதோறும் நடத்தும் இந்திரவிழாவைக் கிருஷ்ணன் தடுத்தான். அதனால் கோபம் கொண்டு இந்திரன் ஏழுநாட்களாகத் தொடர்ந்து பெய்வித்த கல்மழையினின்றும் கிருஷ்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாகக் கொண்டு உயிர்களைக் (பசு + ஆயர்) காப்பாற்றினான். மேலும், விழாவின் போது ஆயர்கள் உயிர்பலி செய்துவந்ததையும் தடுத்து நிறுத்தினான். இந்த நிகழ்ச்சிக்குப் பின் தோல்வியடைந்த இந்திரன் மழைக்காலத்தின் முன்னிரண்டு மாதங்கள் தானும், பின் இரண்டு மாதங்கள் கிருஷ்ணனும் வழிபடப்படவேண்டும் என்றும், தானும், பின் இரண்டு மாதங்கள் கிருஷ்ணனும்

ஒன்றே எனக்கூறிக் கிருஷ்ண னுக்குக் கோவிந்தன் என்ற பட் டமளித்துக் கால்நடைகளின் அரசனாக முடிசூட்டியதை ஹரி வம்சம் கூறுகிறது. ஆழ்வாரும் இதனைக் கருத்தில்கொண்டே பசு மேய்க்க முடி சூடியவன் என்ற பொருளில் 'கோவிந்தன்' என்கிறார். இந்நிகழ்ச்சி ஆரி யக் கலாச்சாரத்தைக் கிருஷ் ணன் வெற்றிகொண்டதைச் சுட் டுகிறது எனலாம்.

பூமிதேவிக்கு மகனாகப்பிறந்த நரகாசுரன் வருணனது குடை, மந்திரகிரியின் சிகரமான இரத் தினபர்வதம், தேவர் தாயான அதிதி தேவியின் குண்டலங்கள் என்ற மூன்றையும் கவர்ந்து சென்றான். நரகாசுரனை அழிக் குமாறு இந்திரன் தலைமை யில் தேவர்கள் கிருஷ்ணனிடம் சென்று வேண்டினர். கிருஷ் ணன் நரகாசுரனைக் கொன்று தேவலோகம் சென்று அதிதிதே வியின் குண்டலங்களைச் சமர்ப் பித்தான். இந்நிகழ்ச்சி கிருஷ் ணனது வலிமையைச் சுட்டு கிறது. அதிதிதேவியின் குண் டலங்களைச் சேர்க்கக் கிருஷ் ணன் சத்தியபாமையுடன் தேவலோகம் சென்றபோது, சத் தியபாமை அங்கிருந்த பாரி ஜாதத் தருவைத் துவாரகைக் குக் கொண்டுபோகவேண்டும் என்று விரும்பினாள். கிருஷ் ணனும் அம்மரத்தைப் பெயர்த் தெடுத்தான். போர் செய்யுமாறு இந்திராணி தூண்டவே இந் திரன் கிருஷ்ணனுடன் போர் செய்தான். எனினும் இந்தி ரன் தோல்வியுற்றான். பாரி ஜாத மரம் துவாரக்கைக்கு வந் தது. இந்திரனின் வலிமை யற்ற தன்மை, நரகாசுரனைக் கொல்லவேண்டி, அவன் கிருஷ் ணனை நாடியபோதே புலப்ப டத்தொடங்கிவிட்டது எனலாம்.

மேலும் தேவலோகப் பொரு ளான பாரிஜாதமரம் கிருஷ்ண னது வலிமையால் பூவுலகுக்கு வருகிறது.

இந்திரனை வழிபட்டு வளம் சிறக்கவேண்டி விழா எடுத்தல் ஆயரினத்தவரால் கொண்டா டப்பட்டதைக் கோவர்த்தனகிரி நிகழ்ச்சி சுட்டுகிறது. சிலம்பும் மணிமேகலையும்,

"பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென வாழ்த்தி"

இந்திரனை வேண்டி வழிபட்ட தைச் சுட்டுகின்றன. எனினும் இந்திரவிழாவை விஷ்ணுவு டன் தொடர்புபடுத்தி பிருகத்சம் ஹிதையும், விஷ்ணு தருமோத் திர புராணமும் சுட்டுவதைச் சுவீரா ஜெயஸ்வால் குறிப்பிடு கிறார். அசுரர்களால் பல முறை திரும்பத்திரும்பத் தோற் கடிக்கப்பட்ட பின்னர், தேவர் கள் அனைவரும் இந்திரனு டைய தலையில் விஷ்ணுவை அணுகினர் என்றும், அவர் தமது கொடிக்கம்பைத் தேவர்க ளுக்குக் கொடுத்துதவினார் என் றும் கூறப்படுகிறது. இந்தி ரன் தன் கொடியை அரசர் களுக்கு ஈந்தான். பகைவரை வெற்றி கொள்வதற்காக இந்தி ரனுடைய கொடியை உயர்த்தி விழாக்கொண்டாட வேண்டும். இக்கருத்தை அரண் செய் வது போல், இந்திரனின் கோயி லில் உள்ள அயிராவதம் எழு திய கொடியைச் சிறப்பித் தும், இந்திரனை ஆயிரம் பொற்குடங்களில் காவிரிநீரால் நீராட்டினமைப் பற்றியும், அர சன் தன் பகையை வெல்ல வேண்டி இந்திரவிழா எடுத் துச் சிறப்பித்ததையும் சிலம்பு சுட்டுகிறது. இந்நிகழ்ச்சியா னது வளமை வேண்டியும், பூவுலக மன்னர்களின் பகை

யைப் போக்கும் வலிமையுடை யவனான இந்திரனை வேண்டு தல் என்று இந்திரனது தாழ் வையே சுட்டுகிறது.

வேதகாலத்தில் மிகுந்த வலிமை வாய்ந்தது என்றும், உள்ளன இல்லனவாகச் செய் யும் மாயை, கிருஷ்ணனுக்கு அடங்கிய ஒரு சக்தியாக, அவ னது சகோதரியாகக் கூறப்படு கிறது. இதுவும், கிருஷ்ணனின் வலிமையையே சுட்டுகிறது.

மகாபாரதத்தில் அர்ஜுனனுக் குத் தன் தங்கை சுபத்தி ரையை மணமுடித்துத் தருதல், அக்னி தேவதையின் பிரார்த்த னையை நிறைவுசெய்து காண் டீவவனத்தை எரித்தது, இந் திரனின் நண்பனாகவும் அக் காட்டின் காவலன்ாகவும் விளங் கிய தக்ஷகன் என்ற பாம் பைக் கொன்று அர்ஜுனன் காண்டீவ வில்லைப் பெற உத வியது, போரில் வெற்றிபெ றும் பொருட்டு தேவேந்தி ரனான இந்திரனைக் கர்ண னிடம் சென்று கவசகுண்ட லங்கள் இரந்து வருமாறு செய்ததும் என்ற கிருஷ்ண னின் மானிடத்தன்மை வாய்ந்த செயல்கள் குறிக்கப்பெறுகின் றன. மேலும் கிருஷ்ணன் தன் குருவான சாந்தீபினியின் பிள்ளைகளை மீட்டுக்கொ டுத்தல், வைதிகன் பிள்ளை களை மீட்டுக்கொடுத்தல், உத்த ரையின் சிறுவனை உயிர்ப்பித் தது போன்ற சில மாயச் செயல் களைச் செய்கின்றான். வரு வது உணர்ந்த தன்மையுட யவனாய், சிறந்த தத்துவவா திபோல் விளங்கிக் கீதையைப் போர்க்களத்தில் உபதேசிக்கின் றான். பாண்டவர்க்காகத் தூது நடந்ததைச் சிலம்பும், ஆழ்வார் பாசுரங்களும் சிறப்பிக்கின்றன,

இவை கிருஷ்ணன் எல்லாத் தெய்வங்களுக்கும் தெய்வமான, உயர்ந்த பதவியைப் பெற்றதை மகாபாரதத்தின் பல்வேறு பகுதிகளின் வாயிலாக அறியலாம் என்பதைக் காட்டுகின்றது.

## முடிவுரை :

வாசுதேவ கிருஷ்ணன் தன்னையொரு பிராமணன் என்று கூறுக்கொள்ளாதது, சத்திரியர்களின் நண்பனாகச் சித்தரிக்கப்படுவது, உயிர்ப்பலி, வேள்வி என்பவற்றைத் தடுத்து நிறுத்தினமை என்பன ஆரிய - திராவிடக் கலப்பு நிகழ்ந்து சமன்படுத்தும் முயற்சி வலுப்பெற்றதைக் காட்டுகின்றது. இறுதியில் வாசுதேவ கிருஷ்ணன் விஷ்ணுவே என்று கூறி, விஷ்ணுவின் பண்புகள் பலவும் கிருஷ்ணனுக்கும் ஏற்றப்படுகின்றன. நரகாசுர வதத்தில் வலிமைபெற்ற கிருஷ்ணன் பின் கோவர்த்தனகிரி, பாரிஜாதமரம் கொணர்தல் என்ற நிகழ்ச்சிகளால் இந்திரனைவிட மிகவும் வலிமை படைத்தவனாக அவனின் மக்களாலும், பிற கடவுளர்களாலும், இந்திரனாலும் உணரப்படுகிறன்.

முதலில் இந்திரனைத் தேவர்களின் தலைவனாகக் காட்டி, அவன் நண்பனாகக் கிருஷ்ணனைச் சுட்டுதல், பின் வலிமையால் இருவரும் சமம், இருவரிடையேயும் பேதமில்லை; இருவரும் தத்தமது வலிமையால் பிறருடைய செயல்களையும் செய்யும் உரிமைபெற்றவர்கள் எனக் காட்டுதல், இந்திரன் வலிமை குன்றித் தன் உதவிகோரி வரும் போது உதவுதல் மூலம் பாராட்டுக்களையும் சிறப்புக்களையும் இந்திரனிடமிருந்து பெறுதல், அவனால் பாராட்டப்பெற்றுப் பின் அவனையே தோற்கடித்துத் தன்னை வணங்கச்செய்தல், இந்திரனது சாபம் தீர்க்கும் தன்மையை உயர்நிலையாகப்பெற்று,மிக உயர்ந்த தெய்வமாகப் போற்றப்படுதல் என்ற படிநிலைகளில் இந்திர வழிபாட்டைக் கிருஷ்ண வழிபாடு வெற்றிகொண்டது எனலாம்.



(தொடர் கட்டுரை)



# ஸஹஸ்ர நாமம்

## நம்மாழ்வார் விளக்கம்

T.S. ராஜகோபாலன்

அக்ராஹ்ய சாச்வத: க்ருஷ்ணோ
லோஹிதாக்ஷ: ப்ரதர்தந: ।
ப்ரபூதஸ் த்ரிக குத்தாம
பவித்ரம் மங்களம் பரம்: ।। 7 ।।

**56. அக்ராஹ்ய:** - உலகுக்குக் காரணமானாலும், இவன் ஒருவர்க்கும் வசப்பட்டவனல்லன். தானே காரணமும் தானே கர்த்தாவாகவும் இருப்பவன். இவனது உருவைக் காண இயலாது என்பது குறிப்பு.

சிந்தைக்குஞ் கோசர மல்லன் (1-9-6)

**57. சாச்வத:** -, அவ்வப்போது அவதாரஞ் செய்தும் தனது இயல்பு குலையாமல் இருப்பவன்.

என்றுமோர் இயல்பொடு நின்ற என் திடரே (1-1-6)

[திடர்-திண்ணம்; நிலையான வேதத்தால் புகழப்படுவதால்.]

**58. க்ருஷ்ண:** இந்த உலகைப் படைக்கும் லீலையால் மகிழ்வோன்.

இன்புறும் இவ்விளையாட்டுடையான் (3-10-6)

**59. லோஹிதாக்ஷ:** இவ்வாறு படைத்துப் பெறும் மகிழ்ச்சியாலும், செல்வத்தாலும், வாத்ஸல்யத்தாலும் சிவந்த கண்கள் உடையவன்.

கண்கள் சிவந்து பெரியவாய் (8-8-1)

[பெரியவாய்-பெரியவனவாகி, அன்பரைக் காணும் மகிழ்ச்சியாலே]

**60. ப்ரதர்தந:** (இவ்வாறு படைப்பவனே) ப்ரளய காலத்தில் எல்லாவற்றையும் அழிப்பவன்.

உலகெல்லாம் - ஊழிதொறுந் தன்னுள்ளே
படைத்துக் காத்துக் கெடுத்துழலும் (10-7-9)

**61. ப்ரபூத:** ஒப்பற்ற ஸ்ரீவைகுண்டத்தை உடையவன்; ஆதலால் மிகப்பெரியவன்;

வீற்றிருந்து ஏழுலகுந் தனிக்கோல் செல்ல (4-5-1)

[வீற்றிருந்து-வேறுபாடு தோன்ற விளங்கி]

இல்வேழுலகை இன்பம் பயக்க... வீற்றிருந்து
ஆள்கின்ற எங்கள் பிரான் (7-10-1)

[பிரான் - தலைவன்]

### 1.8. ஸ்ரீவைகுண்டத்தில் இவனது மேன்மை

[ஸ்ரீவைகுண்டம் என்பது என்றும் அழியாதது. இது லீலாவிபூதியைப்போல் மும்மடங்கு பெரியது. விபூதி-செல்வம். இது நித்ய விபூதியாகும்.]

**62. த்ரிககுத்தாம:** லீலாவிபூதியைப் போல் மும்மடங்கு பெரியதான ஸ்ரீவைகுண்டத்தை உடையவன்.

சூழ்ந்து, அகன்று, ஆழ்ந்து, உயர்ந்த
முடிவில் பெரும் பாழேயோ (10-10-9)

[பாழ்-ஆகாசம், எங்கும் அடர்ந்து, அகலம் மிக்கு, மேன்மேலும் உயர்ந்து செல்லும் உலகம், இது; இதற்கு அதிபதி பகவான்.]

**63. பவித்ரம்:** இழிவானவை தன்னைச் சாராமல் தூய்மையுடையவன்; யாவரையும் தூயோராக்கும் புனிதன்.

தீர்த்தன் (2-8-5)

[தீமனங்கெடுத்துப் பரிசுத்தராக்குமவன்]

**64. மங்களம் பரம்:** பரம் மங்களம்: தீய குணங்கள் அணுகாமல் கல்யாண குணங்கள் எண்ணிறந்தன வாய்ந்தவன் (63, 64 - மேன்மைக்கு இரண்டு அடையாளங்கள் - உபயலிங்கம்) முக்கியமாக ஒளிமயன், ஆனந்தமயன்.

உணர் முழுநலம் (1-1-2)

[கட்டடங்க ஞானமும் ஆனந்தமுமாக விளங்குவோன்.]

ஈசாந: ப்ராணத: ப்ராணோ
ஜ்யேஷ்ட: ச்ரேஷ்ட: ப்ரஜாபதி: ।
ஹிரண்யகர்ப்போ பூகர்ப்போ
மாதவோ மதுஸூதந: ॥ 8 ॥

**65. ஈசாந:** எல்லாவற்றையும் நிர்வஹிக்க சக்தி ஒருகாலும் குறையாதவன்.

ஆளும் பரமனைக் கண்ணனை (3-7-2)

**66. ப்ராணத:** நித்ய கைங்கர்யம் செய்ய நித்ய சூரிகளுக்கு வேண்டிய சக்தியை அளிப்பவன்.

தனியேன் ஆருயிரே (10-10-1)

[தனது குணங்களை அனுபவிக்கச்செய்து, இதுவே போது போக்காகுமாறு எனக்கு உயிராக இருப்பவனே!]

**67. ப்ராண:** தன்னைக் கிட்டியவர்களுக்கு உயிராக இருப்பவன்.

எனக்கு ஆராவமுதாய், எனதாவியை, இன்னுயிரை
(10-10-6)

[எனது இன் உயிர்-எனக்கு ஆத்மா]

**68. ஜ்யேஷ்ட:** எவ்வளவு அனுபவித்தாலும் எல்லை காணமுடியாது; ஆதலால் இவர்களால் கொண்டாடப்பெறுவோன்; யாவர்க்கும் முந்தியவன்.

கூறுதல் ஒன்று ஆராக் குடக்கூத்த அம்மானை
(2-5-11)

[பெருமையைப் பேசப்புக்கால், எல்லை காணமுடியாது.]

**69.** *ச்ரேஷ்ட:* நித்ய சூரிகளாற் கொண் டாடப்படும் மேன்மை யுடையோன்.

திசைதோறு அமரர்கள் சென்று இறைஞ்ச நின்ற (10-4-10)

**70.** *ப்ரஜாபதி:* மிகச் சிறந்தவர்களான நித்ய சூரிகளுக்குத் தலைவன்.

முனிவர்க்குரிய அப்பனை (8-1-11)

[முனிவர்-மனனஞ்செய்வோர்; ஸநகாதிகள் போன்றோர்]

### 1.9. இவனது மேன்மை

**71.** *ஹிரண்ய கர்ப்ப:* (இவனை அனுப விப்பதற்கான தேச விசேஷம்) பொன்னுலகு என்ற பரமபதத்தில் வாழ்பவன்.

பொன்னுலகு (6-8-1)[பரமபதம்: இதில் வாழ்ப-வன்.]

**72.** *பூகர்ப்ப:* பூமிப் பிராட்டிக்குத் தன் அனுபவத்தை அளித்து கர்ப்பத்தில் வைப்பது போலக் காப்பாற்றுபவன்.

தடம் பெருந்தோள் ஆரத் தழுவும்-பார் என்னும் மடந்தையை (2-8-7)

**73.** *மாதவ:* திருமகள் கேள்வன்.

கோகனகத்தவள் கேள்வன் (9-8-2)

[கோகனத்தவள் - தாமரையாள், லக்ஷ்மி.]

**74.** *மதுஸூதந:* மது என்ற அசுரரை அழித்தவன்.

மாயா! வாமனனே! மதுசூதா! (7-8-1)

மதுக்கள்-இந்த்ரியங்கள் இந்த்ரியங்களை அடக்கித் தனக்கே இலக்காக்கிக் கொள்பவன்.

எனது ஏழை நெஞ்சு ஆளும், திருந்தாத ஓர் ஐவரைத் தேய்ந்தற மன்னி (8-7-2)

[நெஞ்சு ஆளும் - நெஞ்சை அடக்கி ஆள் கின்ற. ஐவர் - ஐந்து இந்த்ரியங்கள், தேய்ந்து அற-குலைந்து போகுமாறு, மன்னி-புகுந்து.]

(தொடரும்)



# சிவ தத்வம்

டாக்டர் டி.ஜி. அனந்தசுப்ரமணியன் - அம்மாபேட்டை

சிவ என்ற பதத்திற்கு எல்லா பிராணிகளின் உறைவிடம் என்று பொருளாகும். அதாவது பிராணிகள் ஒடுங்குவதற்கு ஓர் இடம் என்பதாகும். "விச்ராமஸ்தானமேகம்" என்று கூறப்படுகிறது. சிவ என்ற பதம் எப்படி உண்டாகிறது என்றால் "சீங் ஸ்வப்னே" என்ற தாதுவுலிருந்து "சேரதே பிராணின: யத்ர ஸ சிவ:" என்று உலகத்தில் எல்லாவித புண்ய பாபங்கள், சுக துக்கங்கள் இவைகளை அநுபவித்த பிறகு எந்த ஓர் இடத்தில் ஒடுக்கம் அடைகிறதோ! அந்த இடத்திற்கு சிவ என்று பெயராகும்.

"சாந்தம் சிவம் சதுர்த்தம் அத்வைதம் மன்யன்தே" என்பது வேதவாக்கு. ஜாக்ரத் , ஸ்வப்ந, ஸுஷுப்தி என்ற மூன்று நிலையிலிருந்து விடுபட்டு ஸ்வயம் பிரகாசமாய், ஸச்சிதானந்தமாய், பரப்ரம்மமான சிவம் என்பதாகும். இந்த சிவம் என்ற பரம்பொருளே சக்தியுடன் சேர்ந்து உலகங்களை உண்டாக்க பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற பெயர்களில் பிறப்பு, வளர்ப்பு, முடித்தல் என்ற கார்யங்களைச் செய்து வருகின்றன. ஆனால் பரப்ரம்மம் என்பது தான் எல்லாவற்றையும் செய்கிறது என்று வேதம் கூறுகிறது.

"ஸோ அபிபேத் ஏகாகீ ந ரேமே
ஜாயா மேஸ்யாத்
அத கர்ம குர்வீய"

ஹிரண்யகர்பன் விராட் ஸ்வரூபமான ஜீவசக்தியுடன் பிரம்மாண்டங்களை உண்டுபண்ணி அதுவே காத்தலையும், அழித்தலையும் செய்து விடுகிறது. எப்படி ஒரு வ்யவசாயி நிலத்தில் விதைகளை விதைத்துக் காத்து அறுவடை செய்கிறானோ அதே போலாகும். அதேபோல் ஒரே சக்தியே எல்லாவற்றையும் செய்கிறது என்று கூறுவதுமுண்டு.

"ஸர்வ யோனிஷு கௌந்தேய
மூர்தய ஸம்பவந்தி யா: ।
தாஸாம் பிரம்ம மஹத்யோனிரஹம்
பீஜப்ரத: பிதா ॥
(கீ.அ. 14.4)"

எல்லா படைப்புக்களுக்கும் பிரம்மம் என்பது முக்யமானது. அதுவே நானாக உள்ளேன் தந்தைபோல். எல்லா பூத ப்ரபஞ்சங்களை படைத்து, காத்து, அழித்து, கார்யங்களைச் செய்யும் சக்தியையே பிதாவாகவும், மாதாவாகவும் குறிப்பிடுகிறோம்.

'பிதாஹமஸ்ய ஜகத:"
என்று வேதம் கூறுகிறது.

"மம யோநிர் மஹத்பிரம்ம தஸ்மின்
கர்பம் ததாம்யஹம் ।
ஸம்பவ: ஸர்வபூதாநாம் ததோ
பவதி பாரத ॥
(கீ.அ. 14.3)

பிருகிருதியில் நான் எப்பொழுது கர்பாதானம் செய்கிறேனோ அப்பொழுதே பிரம்மாண்டம் உற்பத்தியாகிறது. அதை காப்பாற்றும், அழிக்கும் கார்யங்களுக்கு பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற சக்தி வடிவமான மூர்த்தங்களைக் கொள்ள வேண்டியுள்ளது.

"யதோ வா இமாநி பூதாநி
ஜாயந்தே,
யேன ஜாதாநி ஜீவந்தி,
யத் ப்ரயந்தி அபிஸம்விசந்தி"

'எதனிடத்திலிருந்து இந்த பூதங்கள் (பிரபஞ்சம்) உண்டாகின்றனவோ, எதனால் உண்டான பூதங்கள் ஜீவிக்கின்றனவோ, எதில் முடிவில் போய்ச் சேருகிறதோ' என்று வேதம் கூறுகிறது.ஆகையால் சிவம் என்ற பரம்பொருள் எல்லாவற்றிற்கும் காரணமாக இருந்து மூன்று மூர்த்திகளை உண்டாக்குகிறது. இந்த மூன்றிற்கும் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற வேலையையும் கொடுத்துள்ளது. பிரளய காலத்தில் எல்லா மூர்த்திகளும் ஒன்று சேர்ந்து பரம்பொருளான சிவ என்பதில் ஐக்யமாகி விடுகிறது. ஆகையால் மூன்று மூர்த்திகள் என்பது சிவ என்ற பரம்பொருளின் பிரணமங்களே யாகும். இவைகளுக்குத் தன்னிச்சையாகச் செயல்பட அதிகாரமில்லை. ஏனெனில் இந்த மும்மூர்த்திகள் பிரளய காலத்தில் காணப்படுவதில்லை.

"பூதக்ராம: ஸ ஏவாயம்
பூத்வா பூத்வா ப்ரலீயதே"

இந்த வேத வாக்யத்தின் படி பஞ்ச பூத ப்ரபஞ்சங்கள் உண்டாகி உண்டாகி மறைகின்றன. ஆகையால் பூத ப்ரபஞ்சம் அனித்யம்.

"தாதா யதா பூர்வ மகல்பயத்"

என்ற வாக்யமும் பிரமாணமாகும். அதாவது கடலில் அலைகள் உண்டாகி மறைவது போலாகும்.

"'அஹமேவாக்ரே நாந்யத் யத்
ஸதஸத்பரம்

